தமிழ் நாட்டுக் காந்தி நினைவு நிதி வெளியீடு—3

மகாத்மா காந்தி அருளிய

# சன்மார்க்க சமயம்

(‘நீதி தர்மம்’ என்ற குஜராத்தி
நூலின் மொழிபெயர்ப்பு)

பரமசிவ நிலையம்,
127, லாயிட்ஸ் ரோட்,
சென்னை-6

“ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்”

கிடைக்குமிடம் :
ஸர்வோதயப் பிரசுராலயம்
திருப்பூர்

# பதிப்புரை

இந்த அரிய நூலை 24 வருஷங்களுக்கு முன் சென்னை, ஆதம்பாக்கம் பொதுஜன ஊழிய சங்கம் வெளியிட்டு மலிவான விலைக்கு விநியோகித்தது. நண்பர் ஸ்ரீ கோ. வேங்கடாசலபதி அவர்களிடமிருந்து கிடைத்த பிரதியைக் கொண்டு கதர் மலர்—ஸர்வோதயப் பிரசுர மாக இதன் இரண்டாம் பதிப்பு வெளிவந்து பிரதிகளெல் லாம் செலவாய் விட்டன. இம்மூன்றும் பதிப்பு தமிழ் நாட்டுக் காந்தி நினைவு நிதியின் ஆதரவில் வெளிவரு வதைக் குறித்து பெருமகிழ்ச்சி கொள்கிறோம். இந்த உயர்ந்த நூலில் அடங்கியுள்ள காந்திஜியின் உபதேசங் களை தற்சமயம் பரப்புவது எவ்வளவு அவசியமென்று சொல்லத் தேவையில்லை. இதைப் பிரசுரிக்க உரிமையும் சந்தர்ப்பமும் முந்திய பதிப்பிற்குப் போலவே இப்பதிப் பிற்கும் பொதுஜன ஊழிய சங்கத்தின் சார்பாக அன் புடன் அளித்த அதன் காரியதரிசி, ஸ்ரீ சொக்கலிங்காச்சாரி யாருக்கு எங்கள் நன்றி.

தமிழ்ப் பெருமகன், சொல்லின் செல்வர் ஸ்ரீ திரு. வி. க. அவர்கள் தமிழ்த்தாயை ஆற்றொணாத்துயரில் ஆழ்த்தி அண்மையிற் காலஞ் சென்றார். இந்நூலின் அருமையை அழகு பெற விளக்கும் அணிந்துரையைப் படிக்கும் அன்பர்களின் மனம் அன்னாரின் மறைவினால் விளைந் துள்ள ஈடு செய்யவியலாத நஷ்டத்தையுன்னி வருந்தா

திருப்பூர்
—10—'53

ஸர்வோதயப் பிரசுராலயம்

எவ்வுயிரும் பொதுவெனக்கண் டிரங்கியுப
கரிக்கின்றார் யாவ ரந்தச்
செவ்வியர்தஞ் செயலனைத்துந் திருவருளின்
செயலெனவே தெரிந்தே னிங்கே
கவ்வையிலாத் திருநெறியத் திருவாளர்
தமக்கேவல் களிப்பாற் செய்ய
ஒவ்வியதென் கருத்தவர்சீ ரோதிடவென்
வாய்மிகவு மூர்வ தாலோ

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிருந்
தம்முயிர்போ லெண்ணி யுள்ளே
ஒத்துரிமை யுடையவரா யுவக்கின்றார்
யாவரவ ருளந்தான் சுத்த
சித்துருவா யெம்பெருமா னடம்புரியு
மிடமெனநான் தெரிந்தே னந்த
வித்தகர்த மடிக்கேவல் புரிந்திடவென்
சிந்தைமிக விழைந்த தாலோ

—இராமலிங்க சுவாமிகள்

# அணிந்துரை

பிறவிகள் பலவற்றுள்ளும் மக்கள் பிறவியே விழுப்ப முடையது. அப்பிறவியில் கடவுள்நிலை யடைதற்குரிய வாய்ப்புண்டு. அவ்வாய்ப்பைப் பயன்படுத்த வேண்டுவது மக்கள் கடமை.

கடவுள்நிலை கூட்டும் வழி யாது? பலர் பல துறை கூறுப. எத்துறையாயினும் அதன்கண் ஒன்றிருளிரல் வேண்டும். அஃதென்னை? அதுவே நீதியென்பது. அந் நீதியைச் சன்மார்க்கம் என்று கூறலாம்.

மக்கள் ஆற்றப்புகுந் தொழின்முறை எதுவாயினு மாக; அதன்கண் நீதி திகழ்தல் வேண்டும். வாழ்விலுந் தொழின் முறைகளிலும் நீதிநெறி பிறழ நின்று, நீதிக்கு வேருகக் கடவுளிருப்பதாகக் கொண்டு நீதியினின்றுங் கட வுளைப் பிரித்துக் கடவுளை வழிபடுவது கடவுளுக்குரிய வழி பாடாகாது. வாழ்விலுந் தொழின் முறைகளிலும் நீதி கடைப்பிடிக்கப் படுமேல், அதுவே சிறந்த கடவுள் வழி பாடாகும். "இன்ன உரு இன்ன நிறமென்றறிவதே லரிது நீதிபலவும், தன்ன வுருவாமென மிகுத்தவனீதி யொடு தானமர்விடம்" என்ருர் ஆளுடைய பிள்ளை யார்.* "நீதிக்கண்ணுடி நினைவார் மனத்துளன்" என் பது திருமந்திரம்.†

'நீதி பிறழாது வாழ்வு நடாத்தல் எளிதாகுங்கொல்' என்று சிலர் கருதலாம். அரிதை எளிதாக்கலும், எளிதை அரிதாக்கலும் மக்கள் முயற்சியைப் பொறுத்து நிற்பன.✓ இளமை தொட்டே தன்னலத்தைக் கடிந்து வாழ்வோனுக்கு

---

* சம்பந்தர் தேவாரம் - மூன்றும் திருமுறை - திருவைகாவூர் பதிகம் (329—4) † தோத்திரம்.

நீதிநெறி நிற்றல் எளிதாகும். மற்றவனுக்கு அஃதரிதாதல் இயல்பு.

தன்னலமே நீதியை மறக்கச் செய்வது.✓ அத்தன்னலப்பேயை யோட்டினால், நீதிக்கடவுள் எழுந்தருளல் உறுதி. தன்னலந் தேயத்தேய, நீதி வளர்ந்து வளர்ந்து அஃதொருபோது தனது முழுநிலை யெய்தும். அந்நிலையே கடவுள் நிலையாகும்.

தன்னலம் விடுத்த ஒருவன் உலகிற்கஞ்சி எக்கடனையும் ஆற்றான். அவன் தன் மனச்சான்று வழியே நடப்பன். அவன் நீதிக்கு மாறுபட்ட வினையை எற்றுக்கு ஆற்றுவன்? தன்னலம் நாடாத ஒருவன் பிறர் நலன் நாடி உழைப்பதையே தனக்குரிய தொண்டாகக் கொண்டு வாழ்வு நடாத்தலான், அநீதியிலிறங்குங் கடப்பாடு அவனுக்கு நேராதென்க.

தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்தலே நீதிநெறி நிற்றலாகும். அதுவே கடவுள் வழிபாடுமாகும். தனக்கென வாழ்வோன் எக்காரணம் பற்றியாதல் அநீதியில் இறங்க நேர்தலால், அவன் நிகழ்த்துங் கடவுள் வழிபாடு கடவுள் வழிபாட்டின்பாலதாகாது. ஆகவே, கடவுள் வழிபாடென்பது தன்னலங் கருதாது உயிர்கட்குச் சேவை செய்வதாகும்.

இச்செம்மை அறத்தை இந்நாளில் கடைப்பிடித்தொழுகுவோர் மிகச் சிலர். அவருள் மகாத்மா காந்தியும் ஒருவர். இவ்வறவோர் செயல்கொண்டு இவரைத் தன்னல மற்ற ஒருவரென்று உலகம் போற்றுகிறது. இக்காந்தியடிகள் போன்றார் உள்ளத்தினின்றும் பிறக்கும் மொழிகளே உலகை நீதிவழியில் செலுத்தும் இயல்பு வாய்ந்தன. கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ? எல்லார் உரையும் உரையாமோ? அறவோர் உரையே உரை.

நீதி தருமம் அல்லது சன்மார்க்க சமயம் என்பதுபற்றிக் காந்தியடிகள் குஜராத் மொழியில் ஒரு நூல் எழுதியுள்ளார். அதன்கண் நீதியே சமயம் அல்லது சன்மார்க்கமென்

பதும், சன்மார்க்கத்தின் இயல் இத்தகையதென்பதும், அதை யொட்டிய பிறவும் விளங்க ஓதப்பட்டிருக்கின்றன. அச்சீரிய நூலின் தமிழ் மொழிபெயர்ப்பைக் கொண்டது இந்நூல். இந்நூலை வெளியிட்ட பரங்கிமலை பொதுஜன ஊழிய சங்கத்தார்க்குத் தமிழ்நாடு பெரிதுங் கடமைப்படல் வேண்டும்.

காந்தியடிகளின் அறவுரை கொண்ட இந்நூலைத் தமிழர்கள் படித்து நலம்பெறுவார்களாக! காந்தியடிகள் வாழ்க!

இராயப்பேட்டை,<br>
சென்னை<br>
1—5—'29.

திரு. வி. கலியாணசுந்தரன்.

# பொருளடக்கம்

# நூன்முகம்

இக்காலத்தில் உலகெங்கும் வெளிவேஷம் அதிகமாகி விட்டது. மனிதர்கள், எம்மதத்தினராயினும் சரி, தத்தம் சமயங்களின் வெளிப்படையான சடங்குகளைப்பற்றிக் கவலை கொள்கிறார்களே தவிர, தங்கள் உண்மைக் கடமைகளை மறந்து விடுகிறார்கள். பணத்தினிடம் நமக்குள்ள பேராசையினால் பிறருக்கு எவ்வளவு துன்பம் விளைகின்றது என்பதைப் பற்றியாவது, விளையக்கூடும் என்பதைக் குறித்தாவது நாம் சிறிதும் சிந்திப்பதில்லை. உலகிலுள்ள பெரும்பணக்காரர்களில் பலர், பொருளீட்டும் முயற்சியில் நீதி, அநீதி என்று பார்ப்பதில்லை யென்பது அனைவரும் அறிந்த விஷயம். மதம் என்பதே வேண்டாமென்று கூறும் மனிதர் பலர் மேனாட்டில் இருக்கின்றனர். இவர்கள், சமயங்களில் உண்மை உண்டாயின் உலகில் இத்துணை துன்மார்க்கங்கள் பெருகாவென வாதிக்கின்றனர். இவ்வாதம் முற்றும் தவறானதாகும் தம் குறைகளை உணராது சாதனங்களைக் குறைகூறுவது மாந்தரியல்பு. இவ்விதமே, அம்மனிதர்களும் தங்கள் தீய ஒழுக்கங்களைப் பற்றிச் சிந்தியாது சமயங்களைக் குறைகூறி, தங்களிஷ்டப்படி யெல்லாம் நடந்து வருகின்றனர்.

இப்படி, மனம்போனபடி நடக்கும் முறை நாளுக்கு நாள் அதிகரிப்பது கண்டு, சிலர் இதைக் கண்டிக்கத் தொடங்கியுள்ளார். உலகில் சமயங்களின் செல்வாக்குப் போய்விடின் பெரும் கேடு விளையும், மாந்தர் நீதிநெறியை

அடியோடு கைவிட்டு மிருகங்களுக்கு ஒப்பாய்விடுவர் என அவர்கள் அச்சமுற்று, எல்லா ஜனங்களையும் சன்மார்க்கத் தைக் கடைப்பிடித்து நடக்குமாறு செய்ய முயன்று வரு கின்றனர். இதற்கென்று ஒரு சங்கமும் ஏற்பட்டிருக் கிறது. உலகில் நிலவும் சமயங்கள் எல்லாவற்றையும் ஆராய்ந்து, அவைகளெல்லாம் சன்மார்க்கத்தையே வலி யுறுத்துவதாக அச்சங்கத்தார் கூறுகின்றனர். சமயங்கள் அனைத்திற்கும் சன்மார்க்கமே அடிப்படையென்றும் அவர்கள் சொல்கிறார்கள். எனவே, ஒருவன் எச்சமயத் தைச் சேர்ந்தவனாயினும், அல்லது சமயத்தையே அடி யோடு தள்ளியவனாயினும் சன்மார்க்கத்தைப்பற்றி ஒழுகு தல் அவனது தலையாய கடமையாகும். நெறி துறந்து ஒழுகும் மாந்தர் இம்மையிலும் சரி, மறுமையிலும் சரி, தமக்கேனும் பிறர்க்கேனும் யாதொரு நன்மையும் செய்து கொள்வதில்லை. சமயப் போலி வேஷங்களை உதாரணமாக எடுத்துக்காட்டிச் சமயத்தையே எள்ளி நகையாடும் மாந் தர்களுக்கு உண்மையை உணர்த்துவது மேற்கூறிய சங்கத் தாரின் முக்கிய நோக்கமாகும் அவர்கள், எல்லாச் சமயங்க ளின் உள்ளுறைசாரத்தையும் திரட்டி அமைத்த சமரச சன் மார்க்கத்தையே ஆதரிக்கின்றனர். அவர்கள் இது குறித் துப் பிரசாரம் செய்வதுடன் தங்கள் வாழ்க்கையிலும் அக் கொள்கையைக் கடைப்பிடித்து நடக்கிறார்கள். இம் மதத்தை "சன்மார்க்க சமயம்" அல்லது "நீதி தர்மம்" என்று அவர்கள் கூறுகிறார்கள். அச்சங்கத்தார் எந்த சமயத்தையும் நிந்திப்பதில்லை. எச்சமயத்தினரும் அச் சங்கத்தின் அங்கத்தினராய்ச் சேரலாம். அப்படிச் சேரு வோர் தங்கள் தங்கள் சமயங்களில் திடமான உறுதி கொண்டவர்களாய், சன்மார்க்க வாழ்வில் முக்கிய கவனம் செலுத்துகிறார்கள். நீதி நெறி பற்றி ஒழுகுதல் ஒவ்வொரு வனுக்கும் ஏற்பட்ட இன்றியமையாத கடமை; இதற்குப் பங்கம் ஏற்பட்டால் உலகம் நிலைதடுமாறிச் சின்னாபின்ன மாய்விடும்; மக்கட்குலம் பெருங்கேட்டிற் குள்ளாகும்

என்பது, அச்சங்க அங்கத்தினரின் திடமான நம்பிக்கை யாகும்.

இப்புதிய சன்மார்க்க சமயத்தின் கொள்கைகளை இப் புத்தகத்தில் விளக்க முயற்சி செய்திருக்கிறேன். இதைப் படிக்கும் வாசகர்களை நான் கேட்டுக்கொள்வது ஒன் றுண்டு இந்நூலில் கூறப்படும் சன்மார்க்கக் கொள்கை களில் தங்களுக்குச் சரியாகத் தோன்றுவனவற்றை யெல் லாம் அவர்கள் அனுஷ்டானத்தில் கொண்டு வருவார் களாக. அவர்கள் அங்ஙனம் செய்யின், என்னுடைய இம்முயற்சி பயன்பெற்றதென்று கருதி நான் பெரு மகிழ்ச்சியடைவேன்.

ஆசிரியன்

# சன்மார்க்க சமயம்



## 1. சன்மார்க்கக் கடமை

உலகத்திலுள்ள சாமான்ய சாஸ்திரங்களெல்லாம் உலகின் நிலையை உள்ளபடியே எடுத்தோதுகின்றன. நீதி சாஸ்திரமோவெனில், உலகம் எப்படி இருக்கவேண்டு மென்பதுபற்றிக் கூறுகிறது மனிதன் எங்ஙனம் வாழ்வு நடத்தவேண்டுமென்பதை நீதி சாஸ்திரத்தின் உதவியால் அறிந்துகொள்ளலாம். மனிதனது உள்ளத்தின்கண் இரண்டு ஜன்னல்களிருக்கின்றன அவற்றில் ஒன்றின் வழியே மனிதன் தான் எப்படிப்பட்டவன் என்றும், மற் றொன்றின் மூலமாகத் தான் எப்படி இருத்தல் வேண்டு மென்றும் கண்டு கொள்ளுகிறான்.

தன் சரீரம், மனம், அறிவு ஆகிய இம்மூன்றினையும் தனித்தனியே நன்கு ஆராய்தல் மனிதனுடைய கடமை யாகும். ஆனால் இது மாத்திரம் போதுமானதன்று. இத்துடன் அவன் நின்றுவிட்டால், மேற்படி ஆராய்ச்சி யின் பயனை அடைந்த அறிவு அவனுக்குச் சிறிதும் உபயோகப்படாது அநீதி, அக்கிரமம், ஆணவம் முதலிய வைகளின் முடிவு யாதென்பதை அவன் அறிதல் வேண் டும் அத்துடன் நில்லாது, இம்மூன்றும் ஒன்றுசேரின் என்ன என்ன தீமைகள் விளையக்கூடுமென்பதையும் நன்குணரவேண்டும். இவைகளை அறிந்த பின்னும் வாளாயிருப்பின் யாது பயன்? தீக்குணங்களைத் தள்ளி நல்லொழுக்கத்தைப்பற்றி ஒழுகவேண்டும். கட்டிடம் ஒன்று அமைப்பதற்காக முன்னால் தயாரிக்கப்படும் சித்தி ரத்தை ஒத்தது சன்மார்க்க சாஸ்திரம். கட்டிடம் எங்ஙனம்

அமைக்கவேண்டுமென்பதைச் சித்திரம் நன்கு காட்டும். அதை யனுசரித்துக் கட்டிடம் கட்டாவிடின், அச்சித்திரத்தினுல் பயன் என்ன? எனவே, சன்மார்க்க தத்துவங்களுக்கிணங்க வாழ்க்கை நடத்தாவிடின், அந்த சாஸ்திர ஆராய்ச்சியினுல் பயன் இல்லை. அநேகர் நீதி வாக்கியங்கள் பலவற்றை மனப்பாடம் செய்துகொள்ளுகின்றனர்; அவைகளைப்பற்றிப் பிரசங்கங்கள் புரிகின்றனர்; அழுத்தந்திருத்தமாக உரையாடுகின்றனர். ஆனுல் அவைகளைப் பின்பற்றி அவர்கள் ஒழுகுவதில்லை, ஒழுகவேண்டுமென்ற ஆசைகூட அவர்களுக்குக் கிடையாது. இன்னும் சிலர் சன்மார்க்க விதிகள் இவ்வுலகில் அனுசரிப்பதற்காக ஏற்பட்டவை யல்லவென்றும் மரணத்திற்குப்பின் நாம் போகவிருக்கும் மறு உலகின் வாழ்வுக்கே உரியவையென்றும் சாற்றுகிருர்கள்! இது முற்றும் பிழையான கொள்கையென்று சொல்லவேண்டியதில்லை.

நாம் மனிதர் என்னும் பெயருக்கு முழுதும் தகுதி பெற வேண்டுமானுல், இன்று முதலே சன்மார்க்கத்தைக் கடைப்பிடிக்கத் துவங்கவேண்டும். அதனுல் எத்தனை கஷ்டங்கள் நேரிடினும் பொருட்படுத்தக்கூடாது. கஷ்டங்களைப் பற்றிச் சிந்தித்து மனத்தளர்ச்சியுருமல், சன்மார்க்க விதிகளை யனுசரித்து நடத்தல் நமது கடமையென்பதை உணர்ந்து, அவ்வாறு நடப்பதிலேயே மகிழ்ச்சியடையவேண்டும்.

கடவுள் எல்லாம் வல்லவர், பரிபூரணமானவர். அவர்தம் அன்புக்கும், அருளுக்கும், நியாயத்திற்கும் எல்லையென்பதேயில்லை. எனின், அவருடைய தொண்டர்களென்று சொல்லிக்கொள்ளும் நாம் எப்படி சன்மார்க்கத்தைக் கைவிடலாகும்? நீதிநெறியில் நடக்கும் ஒருவனுக்கு வாழ்க்கையில் வெற்றி கிட்டாவிடின், அது நீதிநெறியின் குற்றமன்று; நீதிநெறிக்கு மாருக நடப்பவனின் குற்றமேயாகும். சன்மார்க்கத்தைக் கடைபிடித்து நடப்பவன் அதற்காக எவ்வித வெகுமதியையும் எதிர்பார்க்கக்

கூடாது. தர்மாத்மா ஒருவன், தன்னைப் பிறர் பாராட்ட வேண்டுமென்பதற்காக நற்காரியங்கள் செய்வதில்லை. நன்மை செய்யாமல் உயிர் வாழ்வதற்கே அவனால் முடியா மல் போய்விடுகிறது. வயிற்றிற்கு உணவைவிட நல்வினை இயற்றல் அவனுக்கு அவசியமாகிறது. 'உணவின்றி யேனும் உயிர்வாழ முடியும். நன்மை செய்யாமல் உயிர் வாழ முடியாது' என்னும் நிலையே சுத்த சன்மார்க்க நிலை யாகும். அந்நிலையடைந்த ஒருவன், அன்னமிட்டவனுக் குப் பசித்தவன் நன்றி செலுத்துவதினும் அதிகமாகத் தனக்கு நற்காரியம் செய்யச் சந்தர்ப்பமளித்தவனிடம் நன்றி பாராட்டுகிறான்.

மேலே கூறிய சுத்த சன்மார்க்கம், ஆடம்பரத்தை விரும்பும் மனிதர்களால் கடைப்பிடிக்கக் கூடியதன்று. உழைப்பு, கல்வி, புறத்தூய்மை முதலிய குணங்களும் தம்மளவிலே சன்மார்க்கமாகமாட்டா. இவையெல்லாம் சன்மார்க்க வாழ்வின் அம்சங்கள்தான். இக்குணங்களை மட்டும் உடைய ஒருவன் சன்மார்க்கத்தின் எல்லையை அணுகியவனே யாவான். பூரண சன்மார்க்க புருஷனாவ தற்கு இன்னும் செய்யவேண்டிய காரியங்கள் பல உண்டு. அக்காரியங்களைத் தன் கடமையாய்க் கருதி அவன் செய்ய வேண்டும் அவை அவன் வாழ்வில் கலந்து அவனது இயற்கையே யாகிவிடவேண்டும். ஏதேனும் பிரதிபலனை உத்தேசித்து நல்வினைகள் செய்தல் உண்மைச் சன்மார்க்க மாக மாட்டாது சன்மார்க்கத்துக்குச் சன்மார்க்கமே சன்மானமாகும்.

# 2. உத்தம சன்மார்க்கம்

இக்காலத்தில் சன்மார்க்கத்தைப்பற்றி ஜனங்கள் கொண்டுள்ள அபிப்பிராயங்கள் சிறந்தனவாயில்லை. சன்மார்க்க விதிகள் அவ்வளவு அவசியமானவையா என்றுகூடச் சிலர் கேட்கின்றனர்; வேறு சிலர், சமயத்திற்கும் சன்மார்க்கத்திற்கும் சம்பந்தம் ஒன்றுமில்லையென்று சொல்லுகின்றனர். ஆனால் உலகிலுள்ள சமயங்களை ஆராய்ந்து நோக்குங்கால், சன்மார்க்கமில்லாமல் எச்சமயமும் நிலைபெற இயலாதென்பது நன்கு வெளியாகிறது. உண்மையான சன்மார்க்கத்தின்கண் சமயத்தின் அம்சங்கள் பலவும் அடங்கியிருக்கின்றன. எவன் ஒருவன், சுயலாபம் எதுவும் கருதாது, சன்மார்க்கத்திலுள்ள பற்றினால் அதை உண்மையாகக் கடைப்பிடித்து நடக்கிறானோ, அவனையே சமயானுஷ்டானம் உள்ளவன் என்று கருதவேண்டும். தாய்நாட்டிற்காகத் தங்கள் இன்னுயிரைத் தியாகம் செய்யும் உத்தம தேசபக்தர்கள் உண்மைச் சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர்களே. தேசமக்களின் நன்மைக்காக வேறு துறைகளில் சுயநலமின்றிப் பாடுபடுவோரும் சன்மார்க்க புருஷர்கள் என்பதில் சந்தேகமில்லை.

நாம் ஏற்கெனவே சென்றுகொண்டிருக்கும் வழியில் செல்வதினாலேயே, சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர்களாக மாட்டோம். உண்மை நெறி எதுவென்பதை நாம் ஆராய்ந்து கண்டுபிடிக்கவேண்டும். பின்னர், அந்நெறியில்—அது பழைய நெறியாயினும் நூதன நெறியாயினும்—அச்சமின்றிச் செல்லவேண்டும். இவ்வாறு, 'நமக்கு உண்மையென்று தோன்றும் வழியை உறுதியுடன் கடைப்பிடிப்பதே உத்தம சன்மார்க்கமாகும். இத்தகைய சன்மார்க்கத்தை அநுஷ்டித்தால்தான் நாம் முன்னேற்றமடைய முடியும். சன்மார்க்கமின்றி, உண்மையான சீர்

திருத்தமோ உண்மையான முன்னேற்றமோ ஏற்படல் என்றும் இயலாத காரியம்

நாம் நமது உள்ளத்தின் ஆசைகளை ஆராய்ந்து பார்ப்பின், நம்மிடமுள்ள பொருள்களை நாம் அதிகம் மதிப்பதில்லை யென்பதும், நம்மிடம் இல்லாதவற்றையே அதிகமாய் விரும்புகிறோமென்பதும் தெரியவரும். இத் தகைய நமது ஆசைகள் இருவகைப்பட்டவை. சுயநல ஆசைகள் ஒரு வகை, பிறர் நலங்கருதும் ஆசைகள் மற்றொரு வகை. சுயநல ஆசைகளைப் பூர்த்தி செய்வதற் கான முயற்சிகள் சன்மார்க்கம் ஆகமாட்டா. பிறருக்கு நன்மை செய்யவேண்டுமென்னும் நோக்குடன், தான் நல்ல நிலையையடைய விரும்புவதே சன்மார்க்கம்.

ஆனால் நாம் நற்காரியங்கள் செய்கிறோம் என்று செருக்கடைவதாவது, அவைகளுக்கு விலை கூறிக் கிரயம் கொள்ளுவதாவது தகாது நாம் மேன்மேலும் உயர்குண முடையவர்களாக முயற்சிக்கவேண்டும். இடைவிடாது நற்காரியங்கள் செய்வதில் ஆசையை வளர்க்கவேண்டும். இப்படிப்பட்ட ஆசையை நிறைவேற்றுவதற்குச் செய்யப் படும் முயற்சியே உண்மையான சன்மார்க்கம்.

நமக்கு வீடுவாசல் இல்லை என்று வைத்துக்கொள் வோம். இதில் வெட்கப்படவேண்டுவது ஒன்றுமில்லை. ஆனால் செல்வம் படைத்திருந்தும் அதை துருபயோகம் செய்தாலும், வியாபாரம் முதலியவற்றில் நெறி தவறி நடந்தாலும் நாம் சன்மார்க்கத்தைக் கைவிட்டவர்களே யாவோம். எனவே செய்யத்தக்க செயல்கள் புரிதலே சன்மார்க்கம். இத்தகைய சன்மார்க்கமே வேண்டற்பாலது. ஒரு குடும்பத்திலோ ஒரு ஜன சமூகத்தினிடத்திலோ விரோதம், அசத்தியம், பொறாமை போன்ற துர்க்குணங் கள் காணப்படுமாயின், அக்குடும்பமும் சமூகமும் நசித்தே விடுகின்றன நீதிநெறியில் நிற்கவும், நன்மை புரியவும் நாம் வெளியிலிருந்து சக்திபெறமுடியாது. அந்த சக்தி நமக்குள்ளேயே நம் ஆத்மாவில் நிலைபெற்

றிருக்கிறது. அந்த சக்தியை வெளிக்கொணர்ந்து பயன் படுத்துவதுதான் நாம் செய்யவேண்டுவது. நான்கு நூற்றாண்டுகட்கு முன்னர் ஐரோப்பாவிலே அநியாயமும், அசத்தியமும் மலிந்திருந்தன. அதன் பயனாக, அக் கண்டத்து மக்கள் ஒரு நாழிகைகூட மன அமைதியுடன் வாழ இயலவில்லை அம்மக்களிடை அக்காலத்தில் சன் மார்க்கம் குன்றியிருந்ததே இதற்குக் காரணம்.

சகல நீதிகளையும் ஒன்றுதிரட்டிக் கடைந்து அவற்றின் சாரத்தை எடுப்போமாயின், மனித குலத்தின் நன்மைக் காக இடைவிடாது தொண்டுசெய்வதே மிக மேலான சன்மார்க்க நியமம் என்று அறிந்துகொள்வோம். சன் மார்க்கத்தைப் பற்றிய இந்த ஜீவாதாரமான உண்மையை நாம் நன்கறிந்துகொண்டுவிட்டால், அதன் மற்ற விதிகளை யெல்லாம் எளிதில் அறிந்து அனுஷ்டிக்க வல்லவர்களா வோம்.

# 3. சன்மார்க்கச் செயல் எது?

ஒரு காரியம் சன்மார்க்கத்துக்கு உகந்ததா, அல்லவா என்பதை எப்படி நிர்ணயிப்பது? சன்மார்க்கத்துக்கு முற்றும் விரோதமான செயல்கள் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றைப்பற்றி நாம் இங்கே பேசவில்லை சன் மார்க்கத்துக்கு விரோதமில்லாத குற்றமற்ற வேறு பல காரியங்கள் இருக்கின்றன அவைகளையே இங்கு நாம் கவனிக்கிறோம். இத்தகைய காரியங்களையும் சன்மார்க்கச் செயல்கள் என்று சிலர் கருதுகிறார்கள். இக்கருத்து பிழை பட்டதாகும் சாதாரணமாக நமது வாழ்க்கையில் நாம் செய்யும் பல காரியங்களைச் சன்மார்க்கத்துக்குகந்தவை யென்று சொல்லமுடியாது அவைகளை நாம் சம்பிர தாயத்தை யனுசரித்து, பழமையான வழக்கமென்னும் காரணத்தினால் செய்துவருகிறோமே யல்லாது வேறில்லை. பல காரியங்களில் பழைய வழக்கத்தை அனுசரித்தலும் அவசியந்தான். அவ்வாறு செய்யாவிடில் உலகில் குழப் பம் உண்டாகி எல்லாக் காரியங்களும் தடைப்பட்டுவிடும். ஆனால் இவ்வாறு வழக்கத்தை அனுசரித்து நடத்தலையே சன்மார்க்க வாழ்வு என்று சொல்லமுடியாது.

நாம் எண்ணித் துணிந்து செய்யும் கருமங்களையே சன்மார்க்கச் செயல்கள் என்று கூறவேண்டும், இயந்திரத் தைப்போலச் செய்யும் காரியங்களில் சன்மார்க்கம் என்ற பேச்சுக்கே இடமில்லை. மனிதன் தன் கடமையைச் செய்தேயாக வேண்டுமென்ற அளவில் அவன் இயந்திரம் போல் காரியம் செய்ய வேண்டியவன்தானே என்று வினவ லாம். இது உண்மையே. ஆனால் அதிலுங்கூட, வெறும்

உயிரற்ற இயந்திரம்போல் குருட்டுத்தனமாக வேலை செய்வதற்கும், விவேகத்துடன் ஆராய்ந்து இயந்திரம்போல் கடனாற்றுவதற்கும் வித்தியாசம் உண்டு. அரசன் ஒருவன் ஒரு குற்றவாளியை மன்னித்தானாயின் அவன் செயல் போற்றற்குரியதாய் இருக்கலாம், ஆனால் அவனது மன்னிப்புப் பத்திரத்தை எடுத்துக்கொண்டு போகும் வேலைக்காரன் அரசனால் ஏவப்படும் ஓர் இயந்திரமே யாவான். அத்தூதனும் அந்த மன்னிப்புப் பத்திரத்தைக் கொண்டுபோதலைத் தன் கடமையென்றுணர்ந்து செய்வானாயின், அவனுடைய செயலும் சன்மார்க்கச் செயலாகின்றது.

எந்த மனிதன் தன் விவேகத்தையும், புத்தியையும் உபயோகியாமல், ஆற்று வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படும் துரும்பைப்போல், உலகம் போகும் வழியே தானும் போய்க்கொண்டிருக்கிறானோ, அவன் நீதிநெறி இதுவென்று எவ்வாறு அறிதல் கூடும்? இவ்வுலகில் அவ்வப்போது தோன்றும் ஒரு சிலர் பரோபகார நோக்கங் கொண்டு உலகப் போக்குக்கும், பழைய வழக்கத்துக்கும் மாறாகக் காரியம் செய்கிறார்கள் இத்தகையோர் உலகின் வீர புருஷர்களாவர்.

இப்படிப்பட்ட வீர புருஷர்களில் ஒருவர் ஒரு முறை தம் உபந்நியாசத்தினிடையே கூறியதாவது: "நீங்களே ஆழ்ந்து யோசனை செய்து உங்கள் சொந்தக் கருத்துக்களை வெளியிடக் கற்றுக்கொள்ளாத வரையில், நீங்கள் என்னைப் பற்றி எத்தகைய அபிப்பிராயம் கொண்டிருந்தாலும் எனக்குச் சிறிதும் கவலையில்லை." இதுபோலவே நாமனை வரும் நமது அந்தராத்மா என்ன சொல்லுகின்றது தென்பதைச் செவிசாய்த்துக் கேட்டு அதற்கிணங்க நடந்தாலன்றி நீதிமார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர்களாக மட்டோம். ஆனால் இந்நிலையை நாம் எவ்வாறு அடைய முடியும்? சர்வாந்தர்யாமியான ஈசுவரன் நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திற்கும் சாக்ஷியாயிருக்கிறான் என்னும் உணர்ச்சி

நம் உள்ளத்தில் வேரூன்றும் வரையில் நாம் மேற்கூறிய நிலை எய்தமுடியாது.

மேலும் ஒரு காரியம் சன்மார்க்கத்திற்குகந்தா என்பதை ஆராயும்போது, அது தன்னளவில் நல்ல காரியமா என்று கவனித்தால் மட்டும் போதாது, அது நல்ல நோக்கத்துடன் செய்யப்பட்டதா என்பதையும் கவனிக்க வேண்டும். ஒரு காரியம் நீதி தர்மத்துக்குப் பொருந்தியதா அல்லவா என்பது காரியம் செய்தவனின் நோக்கத்தையே பெரிதும் பொறுத்தது.

இரண்டு பேர் ஒரே காரியத்தைச் செய்வதாக வைத்துக் கொள்வோம். இவர்களில் ஒருவனுடைய காரியம் சன்மார்க்கத்துக் குகந்ததாயும், மற்றொருவனுடைய செயல் அதற்கு மாறானதாயுமிருக்கலாம். உதாரணமாக, ஒருவன் ஏழைகளிடம் அத்தியந்த கருணை கொண்டு அவர்களுக்கு அன்னமிடுகிறான். மற்றொருவன் பெயரும் புகழும் பெறுவதற்காகவோ, இதுபோன்ற வேறு சுயநல நோக்கங் கொண்டோ ஏழைகளுக்குச் சோறு போடுகிறான். இவ்விருவருடைய செயலும் ஒன்றே யெனினும், முந்தையவனுடைய செயல்தான் நீதி தர்மத்துக்குப் பொருந்தியதாகும், பிந்தையவன் செயல் சன்மார்க்கமாகாது.

மற்றொரு விஷயம் கவனிக்க வேண்டும். சன்மார்க்கச் செயல்களினால் ஏற்படும் நற்பயன்கள் எப்போதும் நமது கண்களுக்குப் புலனாவதில்லை ஆனால் சன்மார்க்கத்துறையில் செல்ல விரும்பும் ஒருவன் தன் காரியங்களின் பயன்களைக் குறித்துச் சிந்தனை செய்தல் கூடாது ஒவ்வொரு காரியமும் செய்யப்புகும்போது அது நற்காரியமா, அதைச் செய்வதில் நமது நோக்கம் பரிசுத்தமானதா என்னும் இரண்டு விஷயங்களை மட்டுமே கவனிக்க வேண்டும். காரியங்களின் பலன்கள்மீது நமக்கு எவ்வித உரிமையுமில்லை. அவ்வுரிமை ஆண்டவன் ஒருவனுக்கே உண்டு.

மேலே கூறியவைகளிலிருந்து, மற்றோர் உண்மை பெறப்படுகிறது. ஒரு காரியத்தைச் சன்மார்க்கத்திற்

குகந்தது'என்று சொல்வதற்கு அது தன்னில் நற்செயலா யிருந்தால் மட்டும் போதாது, நல்ல நோக்கத்துடன் செய் யப்படுவதாயிருந்தாலும் போதாது, அது பிறருடைய வலுக்கட்டாயத்தினலன்றித் தன்னிச்சையினல் செய்யப் படுவதாயு மிருக்கவேண்டும் ஒருவன், கச்சேரிக்கு நேரங் கடந்து போனல் வேலை போய்விடுமே என்ற பயங் காரண மாக, அதிகாலையில் துயில் எழுவானயின், அதில் சிறப்பு ஒன்றும் இல்லை அவ்வாறே, கையில் காசில்லாத காரணத் தினல் நான் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கை நடத்துவேனு யின் அது சன்மார்க்க வாழ்வு ஆகமாட்டாது. அவ்வா றின்றி, நான் பணக்காரனயிருந்தும் என்னைச் சுற்றிலு முள்ள மக்கள் வறுமையினலும் துன்பத்தினலும் வாடுவது கண்டிரங்கி, இவர்களுக்கில்லாத போக போக்கியங்களை நான் எப்படி அனுபவிக்கலாம் என்னும் உயர் நோக்கங் கொண்டு, எளிய வாழ்க்கை நடத்துவேனயின், அது சுத்த சன்மார்க்க வாழ்வாகும். இது போன்றே, வேலைக்காரன் ஓடிப்போய்விடுவானே என்ற பயம் காரணமாக, அவனை அன்பாக நடத்துவதும், சம்பளம் சரிவரத் தருவதும், அல்லது சம்பளத்தை அதிகப் படுத்துவதும் சுயநலமே யல்லாது வேறல்ல இவ்வாறின்றி, உண்மையாகவே வேலைக்காரனிடம் அன்பு கொண்டு, என்னுடைய வரு மானத்தில் அவனுக்குப் பங்கு கொடுத்தல் என் கடமை யென்று கருதிச் செய்தால், அது உத்தம சன்மார்க்கச் செயல் ஆகும்.

பயம் காரணமாகவோ, கட்டாயத்தின்பேரிலோ செய் யப்படும் காரியங்கள் சன்மார்க்கச் செயல்கள் ஆகமாட்டா என்று மேலே கூறினேம். இதுபோன்றே சிறிதேனும் சுய நலக் கலப்புள்ள எந்தக் காரியமும் சன்மார்க்கத்துக் குகந்த தாகமாட்டாது. இப்படிச் சொல்வதனல், சுயநலச் செயல்கள் எல்லாம் தீய செயல்களாகவே இருக்கவேண்டு மென்று பொருள் கொள்ளக்கூடாது அவை தீயவை யல்லாதவையாயுமிருக்கலாம். ஆனல் அவற்றைச் சன்

மார்க்கச் செயல்கள் என்று கூறுதல் சன்மார்க்கத்திற்கே களங்கமுண்டு பண்ணுவதாகும். உலக வாழ்க்கையில் முன்னுக்கு வருவதற்கு, வாக்கு நாணயம் ஒரு சிறந்த உபாயம். ஆனால் முன்னுக்கு வரும் உபாயமாகமட்டும் கொண்டு நாணயத்தைக் காப்பாற்றுபவனிடம், வெகுகாலம் அது நிலைக்க முடியுமா? மற்ற நற்குணங்களின் விஷயத் திலும் இது பொருந்தும். அன்பு ஓர் உயரிய குணம் என் பதில் சந்தேகமில்லை. ஆனால் ஆங்கில மகாகவியாகிய ஷேக்ஸ்பியர் சொல்லியிருப்பதுபோல், "சுயநல நோக்கத் துடன் செய்யப்படும் அன்பு உண்மையில் அன்பேயன்று."

இவ்வுலக லாபம் கருதிச் செய்யப்படும் காரியங்கள் எப்படி நீதி தர்மத்துக் குகந்தனவாக மாட்டவோ, அப்படியே பரலோகத்தில் விசேஷ பயன் எய்தலாம் என்னும் ஆசையினால் செய்யப்படும் கருமங்களும் சன் மார்க்கத்தைச் சேர்ந்தனவாகா. நன்மைக்காகவே நன்மை செய்ய வேண்டும் என்று உணர்ந்து எவன் நற் காரியங்கள் செய்கிறானோ அவனே உண்மையான சன் மார்க்கி இறைவனிடம் பக்தி செலுத்தும் விஷயமும் இவ் வாறுதான். உத்தம பக்தர்கள் எவ்விதக் கைமாறும் கருதி பக்தி செலுத்துவதில்லை அவர்கள் ஆண்டவனிடம் சுவர்க் காதி போகங்கள் வேண்டுமென்றும் கேட்கமாட்டார்கள், இறைவனுக்காகவே இறைவனிடம் அன்பு செலுத்து வார்கள். இவ்வாறு, சன்மார்க்கத்திற்காகச் சன்மார்க் கத்தைக் கடைப்பிடித்தலே உயரிய நெறியாகும் ஒருவன் தன் நண்பர்களிடம் உண்மையுடன் நடந்து கொண்டு பகைவரிடம் பொய்யைக் கையாள்வானாயின் அவன் வீரனல்ல, கோழையே

இவ்வத்தியாயத்தின் தலைப்பில் "சன்மார்க்கச் செயல் எது?" என்று வினவினோம். அது குறித்து இதுவரையில் ஆராய்ச்சி செய்ததில், ஒரு காரியம் சன்மார்க்கத்துக் குகந்ததா, அல்லவா என்று நிர்ணயிப்பதற்கு அதைச் செய்பவனின் நோக்கமே பிரதானமென்று அறிந்து கொண்

டோம். ஆகவே, பிறருடைய காரியங்களைப் பொறுத்த வரையில் அவை சன்மார்க்கச் செயல்களா என்று கண்டு பிடித்தல் மிகவும் கடினம். ஏனெனில், அவர்கள் நோக்கம் இன்னதென்பதை நாம் உள்ளபடி அறிந்து கொள்ள முடியாது. ஆனால் நம்மைப் பொறுத்த வரையில், இவ்வத்தியாயத்தில் கூறியுள்ள விஷயங்களைத் துணைக்கொண்டு நாம் சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுக முயல வேண்டும்.

# 4. தலைசிறந்த சட்டம்

சில காரியங்களை நாம் நல்லவை என்கிறோம்; மற்றுஞ் சில காரியங்களைக் கெட்டவை என்கிறோம். இயற்கையாகவே நமக்கு மகிழ்ச்சி தரும் காரியங்கள் உண்டு; அவ்வாறே நமக்கு வெறுப்புத் தரும் வினைகளும் உண்டு. ஆனால் இவ்வாறு ஒரு காரியத்தை நல்லதென்றோ, கெட்டதென்றோ தீர்மானிக்கும்போது, அது நன்மை பயக்கக் கூடியதா, தீமை செய்யக்கூடியதா என்று ஆராய்ந்து நாம் முடிவு கட்டுவதில்லை பரம்பரையாக வந்த அபிப்பிராயங்கள் பல நம் உள்ளத்தில் ஏற்கெனவே இருந்து வருகின்றன. இவ்வபிப்பிராயங்களை ஆதாரமாகக்கொண்டே நாம் மற்றவர்களுடைய காரியங்களை நல்லவை, கெட்டவை என்று நிர்ணயிக்கிறோம். ஒரு மனிதன் மற்றொருவனுக்குத் தீங்கு செய்வதாக வைத்துக் கொள்வோம் அதனால் நமக்கு யாதொரு தீமையும் விளையவில்லை யென்றாலும், நாம் அதைத் தீய செயல் என்றே கருதுகிறோம். சில சமயம் தீங்கிழைப்பவனிடம் நாம் அநுதாப முள்ளவர்களா யிருத்தலுங்கூடும். எனினும் நாம் சிறிதும் தயங்காமல் அவனுடைய தீய செயலைக் கண்டிக்கிறோம். சில சமயம் நமது அபிப்பிராயங்கள் தவறாகி விடுகின்றன மனிதர்கள் என்ன நோக்கங்கொண்டு காரியம் செய்கிறார்கள் என்பதை நம்மால் எப்போதும் அறிய முடியாதிருப்பதால் இத்தகைய தப்பபிப்பிராயங்களுக்கு இடமேற்படுகிறது. இருப்பினும், செய்தவனின் நோக்கம் தெரியவில்லை யென்பதற்காக நாம் காரியங்களைப்பற்றிப் பரிசீலனை செய்யாதிருப்பதில்லை. தீய செயல்களால் நமக்கே இலாபம் கிடைப்பதாயிருந்தால்கூட மனதிற்குள் அவை கெட்ட காரியங்கள் என்பதை நாம் உணர்ந்தே இருக்கிறோம்.

இதிலிருந்து விளங்குவதென்ன? ஒரு காரியம் நல்லதா கெட்டதா என்பது மனிதனுடைய சுயநலத்தையோ,

விருப்பு வெறுப்புகளையோ பொறுத்ததன்று. சன்மார்க்க மும் நமது சொந்த விருப்பமும் பல சந்தர்ப்பங்களில் மாறு பட்டு நிற்கின்றன. குழந்தையிடம் நமக்குள்ள அன்பின் காரணமாக அதற்கு ஒரு பொருளைக் கொடுக்க நாம் விரும்பலாம். ஆனால் அப்பொருளைக் கொடுப்பதால் குழந்தைக்குத் தீமை விளைவதாயிருந்தால் அதைக் கொடுத் தல் சன்மார்க்க விரோதமென்றே நாம் கருதுகிறோம். அன்பு செலுத்துதல் நல்ல காரியம் என்பதில் சந்தேக மில்லை. ஆனால் அன்பு செலுத்தும் முறை சன்மார்க்க வரம்புக் குட்பட்டிராவிடின் அன்பே விஷமாகிவிடுகிகிறது.

சன்மார்க்க நியமத்தில் மற்றொரு விசேஷமுண்டு. அது என்றும் மாறுபடாத தன்மையுடையது. அபிப்பிரா யங்கள் மாறுபடலாம் ஆனால் நீதி நெறி எப்போதும் ஒரு படித்தாகவே இருக்கிறது ஓர் உதாரணங் கூறுகிறேன். நம் கண்கள் திறந்திருக்கும்போது நாம் சூரியனைக் காண் கிறோம், கண்ணை மூடிக்கொண்டாலோ சூரியன் காணப் படுவதில்லை. இதில் நமது கண்களின் நிலை மாறுதலடை கிறதேயன்றி சூரியன் ஒரு நிலையாகவே இருக்கிறானன்றோ? சன்மார்க்க விதிகளின் விஷயமும் இப்படித்தான் நமது அறிவுக்கண் அஞ்ஞானத்தினால் மூடப்பட்டிருக்கும்போது நாம் நீதி தர்மத்தை அறிய முடிவதில்லை, அறிவுக்கண் திறந்துள்ளபோதோ அதை எளிதில் அறிந்து கொள் கிறோம் மக்கள் தங்கள் அறிவுக் கண்ணைத் துல்லியமாக வைத்திருப்பது மிகவும் கடினம். அவர்கள் சாதாரணமாக சுயநல திருஷ்டியுடன் விஷயங்களைக் கவனிப்பதால் அநீதி யையும் நீதியென்று சொல்லுகிறார்கள். ஆனால் சுயநல நோக்கத்தை அடியோடு துறந்து சன்மார்க்கத்தையே இலட்சியமாகக் கொள்ளும் காலம் விரைவில் வரக்கூடும்.

சன்மார்க்க சாஸ்திரம் இன்னமும் பாலிய பருவத் திலேயே இருந்து வருகிறது. இதுகாறும் மனிதர்கள் பூத பௌதிகங்களின் உண்மையை அறிவதிலேயே அதிக உற் சாகம் காட்டி வந்திருக்கிறார்கள். சன்மார்க்க விதிகளை

ஆராய்வதற்குப் பதிலாக அவர்கள் இயற்கை 'விதிகளை ஆராய்ச்சி செய்வதில் ஈடுபட்டு வந்தார்கள். அவ்வளவு தீரத்துடனும், தன்னலமறுப்புடனும் சன்மார்க்க நியமங் களைப் பரிசீலனை செய்வதில் ஈடுபட்டுத் தம் வாழ்நாளை அதிலேயே செலவிட்ட பண்டிதர் ஒருவரை நாம் இன்றுவரை கண்டதில்லை. பிரகிருதி சாஸ்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள அறிஞர்களைப்போல் நீதி சாஸ்திர பரீசீலனையில் ஈடுபடவும் மனிதர்கள் முன்வந் தால்தான் சன்மார்க்க விதிகள் ஒழுங்குபட்டமையும். மற்ற சாஸ்திரங்களின் ஆராய்ச்சியில் மாறுபட்ட அபிப்பிரா யங்கள் அதிகம் இருப்பதைக் காண்கிறோம் ஆனால் சன் மார்க்க சாஸ்திரத்தில் இவ்வளவு கருத்து வேற்றுமைகள் உண்டாவதற்கு இடமில்லை கொஞ்சகாலம் வரையில் இவ்விஷயத்திலும் சிறிது அபிப்பிராய பேதமிருக்கலாம். ஆனால் சத்தியத்துக்கும் அசத்தியத்துக்கும் உள்ள பேதத்தை அறிதல் இயலாத காரியமன்று.

இதிலிருந்து, சன்மரர்க்க விதிகள் மனிதர்களுடைய அபிப்பிராயங்களையும், விருப்பு வெறுப்புகளையும் கடந்து நிற்பவையென்று நாம் நன்கறிகிறோம். இவ்விதிகளை நிய மம் அல்லது சட்டம் என்று சொல்லலாம். அரசியல் துறை யில் சட்டதிட்டங்கள் உள்ளதுபோல் சன்மார்க்கத் துறை யிலும் ஏன் சட்ட திட்டங்கள் இருத்தல் கூடாது? சன் மார்க்க சட்டம் மனிதனால் இயற்றப்படவில்லை யென்பது உண்மையே. அதுவே அதனுடைய பெருமையாகும். சன்மார்க்க விதிகள் உண்டென்பதை நாம் ஒப்புக்கொண் டோமாயின், அரசியல் சட்டங்களுக்கு நாம் உட்பட்டு நடப்பதுபோலவே அவற்றிற்கும் உட்பட்டு நடத்தல் வேண்டும். உண்மையில், சன்மார்க்க சட்டம் அரசாங்கச் சட்டங்களையும், வியாபார விதிகளையும் விட உயர்ந்தது. "வியாபார விதிகளை மீறி நடந்தால் நான் ஏழையாய்த் தானே போவேன்? போனால் போகிறேன்" என்று ஒரு வன் சொல்லலாம். இவ்வாறே அதிகாரிகளின் கோபத்தை

ஏற்கத் துணிந்து அரசாங்கச் சட்டங்களையும் ஒருவன் அலட்சியம் செய்யலாம். ஆனால் சன்மார்க்க சட்டங்களை எவனும் அசட்டை செய்ய முடியாது. "நான் பொய் சொன்னாலென்ன?" என்று எவனும் கூறித் தப்ப இயலாது.

இவ்வாறு சன்மார்க்க சட்டத்துக்கும் உலகியல் சட்டங் களுக்கும் வித்தியாசம் நிரம்ப இருக்கின்றது. ஏனெனில், சன்மார்க்க சட்டத்தின் இருப்பிடம் நமது இதயமேயாகும். ஒருவன் துன்மார்க்கச் செயல் புரியும்போது தன் மனதிற் குள் தான் தீயதைச் செய்வதாக உணர்ந்தே யிருக்கிறான். பொய் எக்காலத்தும் மெய்யாகி விடாது. துஷ்டர்களும், நீதி நியமங்களை அறவே கைவிட்டவர்களுங்கூடத் தாங் கள் சன்மார்க்க புருஷர்கள் என்று நடிக்கிறார்கள். இதன் காரணமென்ன? அத்தகைய மனிதர்களும் சன்மார்க்கத் தைக் கடைப்பிடித்தல் அவசியமென்பதை உணர்ந்திருப் பதுதான் சன்மார்க்க சட்டத்தின் மகிமை இதுவே யாகும். அது பழக்க வழக்கங்களையும், பொது ஜன அபிப்பிராயத்தையும் பொருட்படுத்துவதில்லை. பழக்க வழக்கங்களும் பொதுஜன அபிப்பிராயமும் சன்மார்க்க விதிகளை .அனுசரித்துள்ள வரையில்தான் அவை சன் மார்க்க புருஷனைக் கட்டுப்படுத்தும் ஆனால் அவ்விதிகள் எங்கிருந்து தோன்றுவன என்று கேட்கப்படலாம் அவை எந்த அரசாங்கத்தாலும் செய்யப்பட்டவையல்ல. ஏனெ னில் பல்வேறு இராஜ்யங்களில் பல்வேறு சட்டங்கள் இருப்பதை நாம் காண்கிறோம். ஸோக்ரத்தர் என்னும் கிரேக்க மகான் உயிர் வாழ்ந்த காலத்தில் அவர் பின்பற்றி ஒழுகிய சன்மார்க்க விதிகளுக்கு மாறுபட்டவர்கள் எத் தனையோ பேர் இருந்தார்கள். இதன் காரணமாக அவர் விஷமருந்தி உயிர் துறக்க நேர்ந்தது. ஆனால் அவர் கடைப்பிடித்த சன்மார்க்க விதிகளின் மேன்மையை இப் போது உலகமெல்லாம் ஒப்புக்கொள்கிறது. இவ்வுலகில் சைத்தானே நேரில் உருவெடுத்து வந்து துவேஷத்தையும், பொய்யையும் பரப்பிய போதிலும், நீதியையும் சத்தியத்

தையும் விரட்டிவிட முடியாது. சன்மார்க்க நியமமே என்றென்றும் இவ்வுலகில் சர்வோத்கிருஷ்டமான, தெய்வீகச் சட்டமாய் இருக்குமென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை

தனி மனிதனாயினும், ஒரு சமூகமாயினும், இத்தகைய உயரிய சட்டத்தை மீறிக்கொண்டு நெடுங்காலம் வாழ முடியாது. பயங்கரமாக அடிக்கும் புயல் காற்றானது முடிவில் மறைந்து ஒன்றுமில்லாமல் போவதுபோல், அநீதியும், அநீதி புரிவோனும் கடைசியில் அழிந்துபடுவது திண்ணம். ஸிரியாவிலும், பாபிலோனியாவிலும் மகத்தான சாம்ராஜ்யங்கள் சிறந்தோங்கி யிருந்தன. எனினும் அக்கிரமம் மேலிட்டபோது அவை இருந்தவிடந் தெரியாது மறைந்தன ரோமாபுரி எப்போது சன்மார்க்கத்தைக் கைவிட்டதோ, அன்றே அதற்கு அழிவு காலமும் தொடங்கிற்று. மகா வீரர்களான அதன் புதல்வர்களால் கூட அதனைக் காக்க முடியவில்லை கிரேக்க நாட்டுக் குடிகள் அறிவிற் சிறந்தவர்களா யிருந்தனர் ஆயினும் அவர்களுடைய அறிவாற்றலெல்லாம் அநீதியின் தண்டனையை எதிர்த்து நிற்க முடியவில்லை. எனவே, கிரேக்க சாம்ராஜ்யமும் நசித்தது. பிரான்ஸு தேசத்தில் நிகழ்ந்த பெரும்புரட்சி அநீதியையும், அக்கிரமத்தையும் எதிர்த்துக் கிளம்பிய கலகமேயாகும் ஒரு பெரிய அரசாங்கத்தின் பராக்கிரமங்களெல்லாம் துணை நின்றாலும் அநீதியை நிலை நாட்ட முடியாதென்பது நிச்சயம்.

மேற்கூறியதற்கு மாறாக, எந்த மனிதன் இவ்வுயரிய சன்மார்க்க சட்டத்தின் விதிகளைக் கடைப்பிடித்து ஒழுகுகிறானோ அவன் உயர்வாழ்வு அடைகிறான். அவ்விதிகளைக் கடைப்பிடிக்கின்ற குடும்பம் க்ஷேமம் உறுகின்றது. அத்தகைய சமூகமும் முன்னேற்றமடைகின்றது. அவ்வாறே இவ்வுத்தம சன்மார்க்க சட்டத்தைக் கைக்கொண்டொழுகும் தேசமானது சுதந்திரம், சந்தோஷம், அமைதி ஆகிய உயர் நலங்கள் அனைத்தையும் பெற்றுச் சிறந்தோங்குகின்றது.

# 5. சன்மார்க்கமும் சமயமும்

சமயம் வேறு, சன்மார்க்கம் வேறு என்று சாதாரணமாக ஜனங்கள் கருதுகிறார்கள் ஆனால் இந்த அத்தியாயத்தில் சன்மார்க்கத்தையே சமயமெனக்கொண்டு அதைப் பற்றி ஆராய்ச்சி செய்யப் போகிறேன். இதன் பொருட்டு என்னைச் சிலர் குறை கூறலாம். சமயத் துறையில் சன்மார்க்கத்துக்கு அவசியமில்லை என்று கருதுவோர், சன்மார்க்கமே போதும் சமயம் வேண்டாமென்று சொல்லுவோர் ஆகிய இரு சாராரும் என்னைக் குறை சொல்லக் கூடும் எனினும், சமயத்துக்கும் சன்மார்க்கத்துக்கும் ஜீவசம்பந்த முண்டென்பதை வலியுறுத்த நான் நிச்சயித்திருக்கிறேன்.

சாதாரணமாகப் பார்க்கும்போது, சன்மார்க்கமில்லாமல் சமயமிருக்கக்கூடும் என்று தோன்றுவது உண்மையே. கொடிய துன்மார்க்கச் செயல்கள் புரிந்துகொண்டே சமய நெறியில் நிற்பதாக வேஷம் போடும் தீயோர் பலரை நாம் காண்கிறோம். இதற்கு நேர்மாறாக, உத்தம சன்மார்க்க புருஷர்களாயிருந்தும் தங்களை நாஸ்திகர்கள் என்று சொல்லிக் கொள்வதில் பெருமையடையும் சிலரும் உண்டு. இவ்விருவகையாரின் அபிப்பிராயங்களும் தவறேயாகும். ஆனால் முந்தையவர்களின் விஷயத்தில், அவர்கள் கொள்கை தவறானது என்று சொல்வது மட்டும் போதாது ; சமயம் என்னும் போர்வையைப் போர்த்துக்கொண்டு அக்கிரமங்களைச் செய்வதால் அவர்கள் ஜன சமூகத்துக்கே பெரும் பகைவர்களாவார்கள். சன்மார்க்கமின்றிச் சமயமில்லை, சமயமின்றி சன்மார்க்கமில்லை என்பதே உண்மை.

ஆதிகாலத்தில், சமூகக் கட்டுப்பாடுகளே ஒழுக்க நெறியாகக் கருதப்பட்டு வந்தன. "மக்கள் ஒரு சமூ [illegible] சாத்தியம் ?"

என்று ஆலோசித்து அதற்கேற்ற ஒழுக்க முறைகளைக் கடைப்பிடித்து வந்தனர். நாளாக ஆக நல்லொழுக்கமே நிலைத்து நிற்பதென்றும், தீயொழுக்கம் தீமை செய்பவ னின் அழிவுக்கே முடிவில் காரணமாகிறதென்றும் ஜனங் கள் அநுபவத்தில் கண்டறிந்தார்கள். இன்று அதுவே உண்மையாயிருப்பதைக் காண்கிறோம். இது காரணமாக மனிதர் தெரிந்தோ, தெரியாமலோ பெரும்பாலும் நல்வழியி லேயே சென்று வருகின்றனர் ஆனால் இத்தகைய நடத் தையை சன்மார்க்கமென்றோ, சமயமென்றோ சொல்லுதல் தகாது தற்போது உலகில் சன்மார்க்கச் செயல்கள் என்று சாதாரணமாகக் கருதப்படுபவை பெரும்பாலும் மேற்கூறிய நற்பழக்க வழக்கங்களே யல்லாமல் வேறில்லை. பொதுவாக சமயப்பற்று என்பது ஜனங்களின் இதயத் தில் ஆழ்ந்து நிலைபெறாமல் வெளிப்புறத்திலேயே நின்று வருகிறது ஏதேனும் சோகம் அல்லது விபத்து நேர்ந்து விட்டால் அதைப் போக்கிக்கொள்வதற்காக நாம் சமயத் தைப்பற்றிச் சிறிது சிந்திக்கத் தொடங்குகிறோம்.

அச்சங் காரணமாக நமக்கேற்படும் இத்தகைய சம யாபிமானம் போலி அபிமானமேயாகும். அதன் பயனாக நாம் செய்யும் காரியங்களை உண்மையான சமயத் தொண் டென்றோ, சன்மார்க்கச் செயல்களென்றோ கருதுதல் பெருந் தவறு. ஆனால் ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய வாணாளில் இவ்விஷயமாக எண்ணித் துணிய வேண்டிய சந்தர்ப்பம் ஒன்று வருதல் நிச்சயம். அப்போது அவன் சுயபுத்தி கொண்டு யோசித்து, இலாப நஷ்டங்களையும் உயிரையுங்கூடப் பொருட்படுத்தாமல், தீநெறியை விலக்கி, மனத்திண்மையுடனும் முகங்கோணாமலும் சன் மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுக நிச்சயிக்க வேண்டும். இப்படி நிச்சயித்தொழுகும் ஒருவனையே உண்மையில் சத்புருஷன் என்று சொல்லத் தகும். ஆனால் இத்தகைய சன்மார்க்கம் சமயப் பற்றில்லாத விடத்தில் நிலைத்திருக்க முடியுமா?

• பிறருக்குச் சிறிது தீங்கிழைப்பதால் நமக்குப் பெரு நன்மை விளைவதாயிருந்தாலும் நாம் அவ்வாறு தீங்கிழைத்தல் கூடாது. ஏனெனில் தீய செயலால் நமக்கு வரும் நன்மை உண்மையில் நன்மையேயன்று; நன்மையின் உருத்தாங்கிய தீமையேயாகும். அப்படியிருந்தும், ஜனங்கள் ஏன் தீய செயல் புரிகிறுர்கள்? உதாரணமாக, ஓர் இராஜ தந்திரியை எடுத்துக்கொள்வோம். அவன் சாதாரணமாய்ச் சிறுவர்களிடையே பேசும்போது உயரிய நீதிகளை எடுத்துக்காட்டி அற்புதமாய்ப் பிரசங்கம் செய்கிறுன். ஆனுல் அவனே தன்னுடைய இராஜ்ய விவகாரங்களில் கணக்கில்லாத அக்கிரமங்களை நிகழ்த்துகிறுன். சிறுவர்களுக்கு அவன் செய்த சன்மார்க்க போதனைகளையெல்லாம் இராஜரீக காரியங்களில் அவன் மறந்துவிடுவதின் காரணமென்ன? அல்லது அவை அவனுக்கு ஞாபகமிருந்தால் ஏன் அவற்றைக் கடைப்பிடித்து நடப்பதில்லை? இவ்விஞக்களுக்கெல்லாம் விடை ஒன்றுதான் அதாவது அவனுடைய சன்மார்க்கம் சமயத்தோடு இயைந்ததன்று என்பதேயாகும் சன்மார்க்கம் என்னும் விதைக்குச் சமயம் என்னும் நீர் பாய்ச்சிஞலன்றி அவ்வித்திலிருந்து முளை கிளம்பாது விதை போட்டுவிட்டுத் தண்ணீர் விடாதிருந்தால் அது காய்ந்து உலர்ந்து போகிறது. இன்னும் அதிக காலம் தண்ணீர் விடாமலே வைத்திருந்தால் முடிவில் அழிந்தேவிடுகிறது. இதுபோன்ற உத்தம சன்மார்க்கத்துடன் உண்மைச் சமயம் இயைந்து நிற்றல் இன்றியமையாததாகும் இதையே வேறு விதமாகச் சொல்லின், சமயப்பற்றில்லாமல் சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுகல் இயலாத காரியம் எனலாம். அதாவது, சன்மார்க்கத்தைச் சமயம் என்னும் உருவத்தில் கைக்கொண்டொழுகுதல் வேண்டும்.

இவ்வுலகிலுள்ள பிரசித்தமான சமயங்களையெல்லாம் நாம் ஆராய்ந்தால் மற்ருேர் உண்மையைக் காணலாம்.

கள் எல்லாம் அநேகமாய் ஒரு வகைத்தாகவே யிருக்கின் றன. மற்றும் அச்சமயங்களின் ஆச்சாரிய புருஷர்கள் எல்லோரும் சமயத்துக்கு அடிப்படை சன்மார்க்கமே யென்று அறிவுறுத்தியிருக்கிறார்கள். ஒரு கட்டிடத்தின் அஸ்திவாரத்தைத் தகர்த்துவிட்டால் கட்டிடம் உடனே கீழேவிழுந்து விடுமென்று சொல்ல வேண்டியதில்லை. இது போலவே சன்மார்க்கம் என்னும் அடிப்படை தகர்க் கப்பட்ட தட்சணமே சமயம் என்னும் மாளிகை கீழே விழுந்து மண்ணோடு மண்ணாய்விடும்

சன்மார்க்கத்தையே சமயம் என்று கூறினும் தவறில்லை யென்பது சில அறிஞர்களின் அபிப் பிராயம். "ஆண்டவனே! சன்மார்க்கத்தைத் தவிர்த்து வேறோர் ஆண்டவன் எனக்குத் தேவையில்லை" என்று ஓர் உத்தமர் பிரார்த்தனை செய்வதுண்டாம். சற்று யோசித்துப் பார்த்தால் இதன் உண்மையை நாம் அறி வோம் வாயினால் நாம், "ஆண்டவனே! ஆண்ட வனே!" என்று சொல்லிக்கொண்டு, ஒழுக்கத்தில் தீயவர் களாயிருந்தால் நமக்கு ஆண்டவன் அருள் புரிவானா? 'வாயில் இராம நாமம், கக்கத்தில் கன்னக்கோல்' என்னும் பழமொழிக்கு இலக்காக நாம் நடந்தால் இறைவன் கரு ணைக்கு நாம் பாத்திரராவோமா? ஒரு மனிதன் தெய்வம் உண்டு என்று ஒப்புக்கொள்கிறான், ஆனால் தெய்வத்தின் கட்டளைகளை நிறைவேற்றுவதில்லை. வேறொருவன் ஈசு வரன் பெயரையே அறியான், எனினும் அவன் உண்மை யோடியைந்த சன்மார்க்க வாழ்வை நடத்தி வருகிறான். இவ்விருவரில் எவனை தர்மாத்மா அல்லது உண்மையான ஆஸ்திகன் என்று கூறுதல் தகும்? இவ்வினாவுக்கு விடை சொல்ல நாம் ஒரு கணமும் யோசனை செய்ய வேண்டிய தில்லை. கடவுள் பெயரையே கேட்டறியாதவனாயினும், எவன் அவர் விதித்த அநாதியான சன்மார்க்க நியமங் களைக் கடைப்பிடித்து வாழ்வு நடாத்துகிறானோ அவனே

# 6. சன்மார்க்கமும் இயற்கை நியதியும்

நற்காரியங்களைப் பிறருடைய கட்டாயத்துக்காக வன்றி நமது சொந்த விருப்பத்தினுல் செய்தலே சிறப் பாகும். காற்றினுல் அலைக்கப்பெறும் மேகத்தைப் போல் மனதை அங்குமிங்கும் சிதறவிடாமல், தமக்குச் சரி யென்று தோன்றும் காரியங்களில் உறுதிகொண்டு அவற்றைச் செய்து முடிப்பவர்களே மக்கள் என்று சொல் லத் தக்கவர் அத்தகைய மக்கள் தாங்கள் கடைப்பிடித் தற்குரிய வழி எது என்பதை நன்கறிந்திருப்பார்கள். எல்லா விஷயங்களிலும் நாம் நமது விருப்பம்போல் நடக்க முடியாதென்பது உண்மையே. காலதேச வர்த்த மானங்களுக் கிணங்க நாம் காரியம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படக்கூடும் உதாரணமாக, இமயமலையைப் போன்ற குளிர் மிக்க பிரதேங்களில் நமக்கு விருப்பமில்லா விடினும் கம்பளி உடை தரித்தே யாகவேண்டும். இத் தகைய சந்தர்ப்பங்கள் பல நேரலாம். ஆனுல் இப் பொழுது கேள்வி யென்ன வென்ருல், காலதேச நிலைகளை யனுசரித்து நாம் காரியம் செய்யும்போதுங்கூட சன் மார்க்க நியமத்தைக் கவனிப்பதா, வேண்டாமா என்பதே.

இது சம்பந்தமாக நாம் ஆராயுங்கால், டார்வின்* என்பாரின் கொள்கைகளைச் சிறிது பரிசீலனை செய்தல்

---

* டார்வின் என்பவர் சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்தில் வாழ்ந்த பிரபல உயிர்நூற்புலவர். அவர் இயற்கை சாஸ்திரங் களின் ஆராய்ச்சியில் தலை சிறந்தவர். உலகிலுள்ள ஜீவராசிகள் எல்லாம் ஒன்றிலிருந்து ஒன்ருகப் படிப்படியாய் வளர்ந்து வந்தவை யென்றும், கடைசியாக ஒருவகைக் குரங்கிலிருந்து மனிதன் பரிணமித்தவன் என்றும் அவர் பல ருசுக்களுடன் நிரூபித்தார். இக்கொள்கைக்குப் "பரிணும வாதம்" என்று பெயர் "உலகில் சக்தியுடையதே மிஞ்சி நிற்கும்" என்பது

அவசியமாகும். அவர் சன்மார்க்க சாஸ்திரத்தைப் பற்றி எதுவும் எழுதவில்லையாயினும், உயர் குலத்தின் வாழ்வுக்கும், சன்மார்க்கத்துக்கும் உள்ள சம்பந்தத்தை நன்கு விளக்கியிருக்கிறார் "உலகிலுள்ள மக்கள், விலங்குகள் முதலிய சகல பிராணிகளும் உயிர் வாழ்வதற்கு ஆசை கொண்டிருக்கின்றன. எனவே உலகில் உள்ள ஜீவராசிகளுக்குள் வாழ்க்கைப் போராட்டம் எப்போதும் நடந்து கொண்டே இருக்கிறது இப்போராட்டத்தில் வெற்றி கொள்ளுபவையே உயிர் வாழ்கின்றன தகுதியற்றவை மூலத்துடன் நாசமடைகின்றன. இதுவே இயற்கை நியதி" என்பது டார்வினின் சித்தாந்தம் சரி, மேற்படி வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெறுவதற்குரிய வலிமை எத்தகையதென்று இப்பொழுது கவனிக்க வேண்டும் அது வெறும் சரீர பலம், அல்லது அறிவு வலிமை மட்டுமா? டார்வினுடைய கருத்து இதுவன்று.

கரடி, எருமை முதலிய மிருகங்களுடன் மனிதனை ஒப்பிட்டுப் பார்த்தால் விளங்குவதென்ன? சரீர பலத்தை மட்டும் கவனித்தால் அம்மிருகங்கள் மனிதனைவிட அதிக வலிமை பொருந்தியனவாகும் ஒரு கரடி அல்லது எருமையோடு தேகபலத்தை மட்டும் கொண்டு மனிதன் போராடினால் நிச்சயம் தோற்றேபோவான் எனினும், மனிதன் தன் புத்தியின் பலத்தினால் அம்மிருகங்களை அடக்கியாள்வதை நாம் காண்கிறோம். இவ்விதமே, மக்கட் குலத்துக்குள்ளாகவே நாம் பற்பல சாதிகளை ஒப்பிட்டு நோக்கக் கூடும். மக்களிடையே நேரிடும் யுத்தங்களில், சரீர பலத்திலும் எண்ணிக்கையிலும் மிகுந்தவர்கள்தான் ஜயமடைகிறார்களென்பதில்லை. எந்தக் கட்சியில் அறிவாளிகள் அதிகமோ அக்கட்சி ஆள்பலத்தில் குறைந்திருப்பினும் வெற்றியடைகின்றது. இதிலிருந்து சரீர வலிமையைவிட புத்திபலம் பெரியதென்று விளங்குகிறதல்லவா?

[illegible] விட [illegible]திபலம் அல்லது

கிருர். இதை நாம் பிரத்தியட்சமாகக் கண்டறிதலுங்கூடும். நீதிபலத்தினுல் தகுதி பெறுவோர்தான் இவ்வுலகில் முடிவாக நிலைபெற்று வாழ்கிருர்கள். "தகுதியுடையதே மிஞ்சி நிற்கும்" என்னும் டார்வின் கொள்கைக்குச் சிலர் தவருன பொருள் கொள்கின்றனர். உடல் வலிமை மிக்கவர்களே நிலைபெற்று வாழ்வார்களென்று டார்வின் கற்பித்ததாக அன்னுர் கருதுகின்றனர். இதிலிருந்து, உலக வாழ்க்கையில் சன்மார்க்கத்துக்குச் சிறிதும் அவசியமில்லையென்று அவர்கள் முடிவு கட்டிவிடுகிருர்கள் ஆனுல் டார்வினுடைய கருத்து நிச்சயமாக இதுவன்று. உலக சரித்திரத்தை நாம் ஆராய்வோமாளுல், எந்தெந்த சமூகங்கள் துன்மார்க்கத்தைக் கைக்கொண்டனவோ அவையெல்லாம் சர்வநாசமடைந்து விட்டன வென்பதைக் காண்போம். இன்றுங்கூட, அநீதி நெறியில் செல்லும் ஜாதியார் நம் கண்முன்னே நாசமடைந்து வருவதைப் பார்க்கிருேம்.

மனித சமூகம் நிலைப்பதற்கு சன்மார்க்கம் எத்துணை அவசியமென்பதை விளக்கச் சாதாரண வாழ்க்கையிலிருந்து உதாரணங்கள் எடுத்துக் காட்டலாம் சாந்தம் அல்லது பணிவு சன்மார்க்கத்தின் முதல் நியமமாகும். இதற்கு மாருக ஒருவன் அகங்காரம் மிகுதியும் கொண்டவனு யிருப்பதாக வைத்துக்கொள்வோம் மேலெழுந்தவாரியாகப் பார்க்குங்கால் அம்மனிதன் வாழ்க்கையில் முன்னேற்ற மடைவதுபோல் தோன்றலாம். ஆனுல் சற்று ஆழ்ந்து நோக்கிளுேமாயின், அம்மனிதன் அகங்காரம் என்னும் வாளினுல் தன் கழுத்தைத் தானே அறுத்துக் கொண்டு மாய்கிருன் என்பதை அறிந்துகொள்வோம். சன்மார்க்க சட்டத்தின் இரண்டாவது விதி மனிதன் விஷய சுகங்களில் ஈடுபடக் கூடாதென்பது. இங்கிலாந்தில் 30 அல்லது 35-வது வயதில் மதுபானம் செய்யத் தொடங்குவோர் அதற்குப்பிறகு சராசரியில் 13 அல்லது 14 வருஷத்துக்கு அதிகம் உயிர் வாழ்வதில்லை யென்று அந்நாட்டு

இத்தகைய துர் வழக்கமில்லாதவர்கள் 70 வய்து வரை ஜீவித்திருக்கிறுர்கள். விபசாரம் சன்மார்க்கச் சட்டத்தின் படி ஒரு பெருங் குற்றமாகும். விபசாரம் செய்வோர் அற்பாயுளில் மாண்டுபோகிறுர்கள் என்று டார்வின் நிரூபித்திருக்கிறுர். விபசாரம் செய்பவர்களுக்குச் சந்ததி ஏற்படுவது அருமை, குழந்தைகள் பிறந்தாலும் அவை மிகவும் துர்ப்பலமாகப் பிறக்கின்றன. விபசாரம் செய் வோரின் அறிவும் நாளுக்கு நாள் க்ஷீணிக்க, அவர்கள் முடிவில் பித்தர்போல் ஆகின்றனர்.

ஜன சமூகங்களின் ஒழுக்க நிலையை நாம் கவனித் தாலும் இதே உண்மையைக் காண்போம். அந்தமான் தீவில் வசிக்கும் சுதேசிகளுள் ஆண்மக்கள் தங்கள் மனை வியருக்குக் குழந்தை பிறந்ததும் அவர்களைக் கைவிட்டு விடுகின்றனர். சுயநலத்தில் அவர்கள் தலை சிறந்தவர்க ளென்று இதிலிருந்து விளங்குகிறது. இதன் பயன் என்ன? அந்த ஜாதியே அடியோடு நசித்துப்போகும் தறுவாயில் இப்போது இருந்துவருகிறது கேவலம் மிருகங்களிடத்தும் பறவைகளிடத்தும் கூட ஓரளவு பரோபகார உணர்ச்சியை நாம் காண்கிறோம் கோழைத்தனத்துக்குப் பெயர்போன பிராணிகளும் தங்கள் குழந்தைகளுக்கு ஏதேனும் ஆபத்து வந்துவிட்டால் பயமற்றுநின்று அவற்றைக் காப்பாற்ற முயல்கின்றன எல்லாப் பிராணிகளிடத்திலும் கொஞ்ச மாகவோ அதிகமாகவோ இத்தகைய பரநல உணர்ச்சி இல்லையாகுல், உலகில் முட்செடிகளும் விஷப்பூண்டுகளுந் தவிர வேறெதுவும் உயிர்வாழ முடியாது. மனிதனுக்கும் மற்றப் பிராணிகளுக்கும் உள்ள ஒரு பெரிய வித்தியாசம் மற்ற எல்லாப் பிராணிகளையும் விட அவன் பரநலப் பற்று அதிகம் உடையவன் என்பதேயாம். இக்காரணத்தினுல், மனிதர்கள் அவரவர்களுடைய நீதிபலத்திற் கேற்ற அள வில் தங்கள் குழந்தைகளுக்காகவும், குடும்பத்திற்காகவும்,

நூல் கொள்கையின்படியும், நீதிபலமே எல்லாவற்றினும் சிறந்த பலம் என்பது தெளிவாகின்றது பண்டைக்கால கிரேக்கர்கள் இக்காலத்து ஐரோப்பியர்களைவிட அறிவிற் சிறந்தவர்களா யிருந்தார்கள். ஆனால் அவர்கள் எப்போது சன்மார்க்கத்தைக் கைவிட்டார்களோ அப்போது அவர்களுடைய அறிவே அவர்களுக்குப் பகையாயிற்று. இன்று அவர்கள் இருந்தவிடம் தெரியவில்லை. ஆகவே நாம் இதை எப்போதும் சிந்தையில் வைத்திருப்போமாக மக்கட் குலம் நிலைபெற்று வாழ்வது அதனுடைய பொருட் செல்வத்தையோ, சைன்ய பலத்தையோ பொறுத்ததன்று சன்மார்க்கம் என்னும் அடிப்படையின்மீதே அது மேன்மையுடன் வாழமுடியும். ஆதலின், தமக்கென வாழாமல் பிறர்க்குரியராய் வாழ்தலென்ற உத்தம சன்மார்க்கத்தை மனிதர் கடைப்பிடித்தல் வேண்டும்.

# 7. சன்மார்க்கமே சர்வஜன நலம்

சன்மார்க்கத்திலேயே சர்வஜனக்ஷேமம் அடங்கியிருக்கிறதென்று கூறுதல் பொருந்தும் இதில் எள்ளளவும் சந்தேகமில்லை நீதிபதி ஒருவர் நியாய புத்தியுள்ளவராயிருந்தால் அவருடைய நீதிமன்றத்துக்கு வரும் ஜனங்கள் நலமடைகிறார்களன்றோ? இவ்வாறே அன்பு, தயாளம், நன்றியறிதல் முதலிய நற்குணங்கள் மற்றவர்களுடன் நாம் காரியம் நடத்தும்போதே வெளியாகின்றன. அதாவது, இந்த நற்குணங்கள் எல்லாம் பரநலத்தையே நோக்கமாகக் கொண்டவை. தேசாபிமானத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அது சர்வஜன க்ஷேமம் என்னும் இலட்சியமே உருக் கொண்டதாகும் உண்மையில், சன்மார்க்கத் துறையில் செய்யப்படும் எந்தக் காரியமும் செய்பவனுக்கு மட்டும் நன்மை தருவதா யிராது, அப்படியிருந்தால் அது சன்மார்க்கச் செயலாகாது. ஒருவன் வாய்மை முதலிய நற்குணங்களைக் கைக்கொண்டொழுகினால் அதனால் மற்ற மனிதர்களுக்கு விளையும் நன்மை யென்னவென்று கேட்கப் படலாம். ஆனால் இதைத் திருப்பி வேறு விதமாகக் கேட்டுப்பார்ப்போம். ஒருவன் பொய் சொன்னால் மற்றவர்களுக்கு அதனால் தீங்கு உண்டாகுமா, இல்லையா? உண்டாகும் என்று நாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். ஆகவே அவன் மெய் கூறுவதால் மற்றவர்களுக்குத் தீங்கு விளையாமல் தடுப்பவனாகிறான். இந்த அளவிலேனும் அவன் பரோபகாரியாகிறானன்றோ?

வைத்துக்கொள்வோம். எனவே, அவன் அச்சமூகத்தி னின்று பிரிந்துபோய்த் தனியே வாழ்கிறன். இப்படிப் பட்ட மனிதன் செய்யும் காரியங்களின் பலாபலன்களும் ஜனசமூகத்தைப் பாதியாமல் போவதில்லை. ஏனெனில் அம்மனிதன் வெளி உலகத்தில் தனியே பிரிந்து வாழலாமே யன்றி, மனே உலகில் தனி வாழ்வு நடத்த முடியாது. குறிப்பிட்ட ஒரு வழக்கம் அல்லது கட்டுப்பாடு தீமை யானது என்று ஓர் உத்தம புருஷன் கருதினுல் உடனே அவன் அதைத் தள்ளிவிடவேண்டும். உலகம் தன் கருத்தை ஒப்புக்கொள்ளவில்லையே யென்று அவன் தயங் குதல் கூடாது. முதலில் தான் அத்தீய வழக்கத்தைத் தொலைத்துவிட்டுப் பின்னர் மற்றவர்களையும் தன் வழிக்குத் திருப்ப முயலவேண்டும். இவ்வாறுதான் மகாத்மாக்கள், அவதார புருஷர்கள், சமயாசாரியர்கள் முதலியோர் இவ் வுலகப் போக்கை மாற்றி யமைத்தார்கள்

மனிதன் சுயநலத்தையே பெரிதாகக் கருதி மற்றவர் களின் நன்மையைக் குறித்துக் கவலையில்லாதிருக்கும் வரையில் அவன் விலங்கினத்திலும் கேடானவனுகிறன். தன்னுடைய குடும்ப நலத்துக்காக அவன் உழைக்கத் தொடங்கும்போது விலங்கினத்தைவிடச் சிறிது உயர்வு அடைகிறன். அவன் தன்னுடைய சமூகத்தை அல்லது தேசத்தைத் தன்னுடைய குடும்பமாகக் கருதத் தொடங் கும்போது இன்னும் உயரிய பதவி யெய்துகிறன். காட்டு மிராண்டி சாதியார் உள்பட மக்கட்குலம் அனைத்தையும் அவன் தன் குடும்பமாகக்கருதி நேசிக்கத் தொடங்குங்கால் அவன் மனித சமூகத்தின் மிக 'உன்னத நிலையை எய்து கிறன். அதாவது ஒருவன் மனித குலத்திற்குத் தொண்டு செய்வதில் எவ்வளவுக்குப் பின்னடைந்திருக்கிறனே அவ் வளவுக்கு அவன் கீழானவன்; விலங்கினத்தை நெருங் கியவன்; பூரணமடையாதவன்.✓ நாம் நம்முடைய மனைவி மக்களுக்காகவும், சமூகத்துக்காகவும் கஷ்டப்பட்டாலும், அன்னிய மக்களிடமும் நமக்கு அன்பில்லாதவரையில்

உண்மையான பரோபகார நெறியை உணர்ந்தவர்களாக மாட்டோம். ஏனெனில், மனைவி மக்களுக்கும், சமூகத்துக்கும் மட்டும் உழைப்பவன் அடிப்படையில் சிறிதேனும் சுயநலப் பற்று உள்ளவனே யாவான்.

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வதென்ன? மக்கட் குலத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரிடத்தும் நம் இதயத்தில் தயை உண்டாகாதவரையில் நாம் சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர்கள் ஆகமாட்டோம்; சன்மார்க்கத்தை அறிந்துகொண்டவர்களுமாகோம். உயரிய சன்மார்க்கம் சர்வ ஜனங்களுக்குமுரியதாகும். அதாவது மக்கட்குலத்தைச் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் நம்மீது உரிமையுண்டு என்று கருதி அவர்களுக்கு இடைவிடாது சேவை செய்தலே நமது கடமை. ஆனால் பிறர்மீது நமக்கு எவ்வித உரிமையும் உண்டென்று கருதலாகாது. இத்தகைய சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுகும் சாது இவ்வுலகப் போராட்டத்தில் முன்னுக்கு வரமாட்டான் என்று யாராவது சொன்னால், அது வெறும் பிரமையே ஒருமை நோக்குடன் மக்கட் குலத்துக்குத் தொண்டுசெய்யும் மனிதனை கடவுள் ஒரு நாளும் கைவிடமாட்டார் உலகெங்கும் மனிதர்களுடைய அநுபவம் இதுவேயாகும்.

இத்தகைய சன்மார்க்க சமயத்தின் முன்னிலையில் மக்கள் அனைவரும் 'சரி நிகர் சமான'மா யிருக்கிறார்கள். பதவிகளிலும், தொழில்களிலும் மனிதர்களுக்குள் வேற்றுமை யிருப்பது உண்மையே. ஆனால் உயர்பதவியிலுள்ள ஒருவன் அதன்பொருட்டுக் கர்வமடையக் கூடாது. நான் உயர் பதவியி லிருந்தால் அந்தப் பொறுப்பை வகிக்கும் சக்தி என்னிடமிருக்கிறதென்று மட்டுமே கொள்ளவேண்டும். இதன் பொருட்டு என்னிலும் குறைந்த பொறுப்பு வகிப்பவர்களைத் தாழ்ந்தவர்கள் என்று எண்ணக்கூடாது. நாம் நம்முடைய காரியத்தைச் செய்வதைப்போல் மற்றவர்கள் தங்கள் காரியத்தைச் செய்கிறார்கள். எல்லாம் மனித குலத்தின் நன்மையையே குறியாகக்கொண்டவை.

இத்தகைய மனோநிலை நமக்கு ஏற்படாத வரையில் நாம் கீழ்மக்களே யாவோம்.

இந்த சன்மார்க்க நியமத்தின்படி, ஒரு தேசத்தார் மற்றொரு தேசத்தாரைத் தங்கள் சுயநலங்கருதி ஆளுதல் குற்றமாகும். தற்போது அமெரிக்க நாட்டார் அத்தேசத்தின் பழங்குடி மக்களைத் தாழ்த்தி ஒடுக்கி அவர்களை ஆண்டு வருகின்றனர். இது நீதி தர்மத்துக்கு முற்றும் மாறுபட்டது முன்னேற்றமடைந்த ஒரு சாதியாரின் அதிகாரத்தின் கீழ் தாழ்ந்த சாதி ஒன்று இருப்பதாக வைத்துக்கொள்வோம், முந்தையவர்களின் கடமை யாது? தாழ்ந்தவர்களையும் தங்களுக்குச் சமானமாகும்படி உயர்த்துவதே யாம். இவ்வாறே, நீதி தர்மத்தின்படி அரசன் குடிகளைக் காட்டிலும் பெரியவனாகமாட்டான், உண்மையில் அவன் குடிகளின் ஊழியனேயாவான். அதிகார பதவி வகிப்பவர்கள் தங்கள் பெருமைக்காக வன்றி, குடிகளின் நன்மைக்காகவே அதிகாரத்தைப் பிரயோகிக்க வேண்டும். குடியரசின்கீழ் வாழும் ஜனங்கள் சுயநலமுள்ளவர்களாயிருந்தால் அந்தக் குடியரசினால் எவ்வித நன்மையும் விளையாது, அது நிந்தனைக்குரியதாகவே இருக்கும்.

ஓர் இராஜ்யத்திலோ, ஒரு சமூகத்திலோ பலவான்களாயுள்ளவர்கள் பலவீனர்களைக் காப்பாற்றுதலைத் தங்கள் பரம தர்மமாகக் கருதவேண்டும், அவர்களை நசுக்க முயலுதல் கூடாது. இத்தகைய தர்மம் குடிகொண்டுள்ள இராஜ்யம் அல்லது சமூகத்தில் ஒருபால் கொடிய வறுமையையும் மற்றொருபால் அபரிமிதமான செல்வத்தையும் பார்க்க முடியாது. ஏனெனில், உத்தம சன்மார்க்கத்தை அனுஷ்டிக்கும் ஒருவன் பிறர் கஷ்டப்படுவதைப் பார்த்துக் கொண்டு தான் சுகபோகங்களுடன் வாழ விரும்பான்; எனவே அவன் பணம் சேர்த்துக்குவிக்கவும் மாட்டான். உலகில் இத்தகைய சன்மார்க்கம் மிகவும் குறைவாயிருப்பது போல் தோன்றுவதுகண்டு சன்மார்க்கிகள் அதைரியமடையக் கூடாது, சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதே அவர்

கள் கடமை. அதன் பலன்கள் மீது அவர்களுக்கு அதிகாரம் கிடையாது. அவர்கள் தங்கள் கடமையைச் செய்யா திருப்பதுதான் குற்றம். கடமையைச்செய்து அதனுல் எவ்வித பலனும் ஏற்படாவிட்டால் அவர்களைக் குற்றம் எதுவும் சாராது.

அறிய வல்லவர்களாவோம்? பிறரை அறியாவிடில் அவர் களுக்கு நன்மையான காரியங்களை எப்படிச் செய்ய முடியும்? "மற்றவர்கள் சம்பந்தப்பட்ட காரியங்களில் தான் நாம் நேர்மையுடன் நடக்க வேண்டும். நம்முடைய சொந்தக் காரியங்களில் நம் விருப்பம்போல் நடந்து கொள்ளலாம்" என்று சிலர் கருதுகிறார்கள். இது அறியா மையே. இவ்வுலகில் வாழும் மனிதன் ஒருவன், பிற மனிதர்களுக்குச் சிறிதேனும் தீங்கிழையாமல் தன் விருப்பம்போல் காரியம் செய்ய முடியாது.

ஒருவன் தனக்குத்தானே செய்துகொள்ளவேண்டிய கடமை யாது என்று சற்றே கவனிப்போம். மற்றவர் களுக்குத் தெரியாமல் நாம் இரகசியமாகச் செய்யும் காரியங் களின் பலாபலன்களை நாம் அடைகிறோம் எனவே அவற் றிற்கு நாம் பொறுப்பாளிகள் ஆவோம். ஆனால் இது மட்டுமன்று: நாம் இரகசியமாகச் செய்யும் காரியங்களின் பலாபலன்கள் மற்றவர்களையும் பாதியாமல் போவதில்லை. ஆதலின் நமக்கு இருமடங்கு பொறுப்பு ஏற்படுகிறது. நமது இதய அந்தரங்கத்தில் நாம் எண்ணும் எண்ணங் களும் மற்றவர்களை வசப்படுத்துகின்றன. ஆகையால் ஒவ்வொரு மனிதனும் தன் புலன்களைக் கட்டுப்படுத்தி மனதையும் உடலையும் பரிசுத்தமாக வைத்திருத்தல் இன்றி யமையாததாகும். ஒருவனுடைய எண்ணங்களைப் போலவே அவனுடைய நடத்தை அமையும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஆதலின் நாம் நமது இச்சை களைக் கட்டுக்குள் கொணருதல் மிகவும் அவசியம். குடி, சூது, விபசாரம் முதலியவைகளுக்கு நாம் இரையாகி விட்டால் முழுதும் வலியிழந்தவர்களாகிவிடுவோம். விஷய சுகங்களுக்கு அடிமையாகாமல் தன்னுடைய சரீரம், மனம், புத்தி, ஆத்மா ஆகிய எல்லாவற்றையும் தீமை அணுகா வண்ணம் அரண்செய்து காத்து எவன் பரிசுத்தனாய் விளங்குகிறானோ அவனே வெளி உலக காரியங்களிலும் கீர்த்தி பெற்று விளங்குவான். அவனே இவ்வுலகில் நற்

;றிய வல்லவர்களாவோம்? பிறரை அறியாவிடில் அவர்
ளுக்கு நன்மையான காரியங்களை எப்படிச் செய்ய
மடியும்? "மற்றவர்கள் சம்பந்தப்பட்ட காரியங்களில்
.ான் நாம் நேர்மையுடன் நடக்க வேண்டும். நம்முடைய
'சாந்தக் காரியங்களில் நம் விருப்பம்போல் நடந்து
கொள்ளலாம்" என்று சிலர் கருதுகிறார்கள். இது அறியா
மையே. இவ்வுலகில் வாழும் மனிதன் ஒருவன், பிற
மனிதர்களுக்குச் சிறிதேனும் தீங்கிழையாமல் தன்
விருப்பம்போல் காரியம் செய்ய முடியாது.

ஒருவன் தனக்குத்தானே செய்துகொள்ளவேண்டிய கடமை யாது என்று சற்றே கவனிப்போம். மற்றவர்களுக்குத் தெரியாமல் நாம் இரகசியமாகச் செய்யும் காரியங்களின் பலாபலன்களை நாம் அடைகிறோம். எனவே அவற்றிற்கு நாம் பொறுப்பாளிகள் ஆவோம். ஆனால் இது மட்டு மன்று: நாம் இரகசியமாகச் செய்யும் காரியங்களின் பலாபலன்கள் மற்றவர்களையும் பாதியாமல் போவதில்லை. ஆதலின் நமக்கு இருமடங்கு பொறுப்பு ஏற்படுகிறது. நமது இதய அந்தரங்கத்தில் நாம் எண்ணும் எண்ணங்களும் மற்றவர்களை வசப்படுத்துகின்றன. ஆகையால் ஒவ்வொரு மனிதனும் தன் புலன்களைக் கட்டுப்படுத்தி மனதையும் உடலையும் பரிசுத்தமாக வைத்திருத்தல் இன்றியமையாததாகும். ஒருவனுடைய எண்ணங்களைப் போலவே அவனுடைய நடத்தை அமையும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஆதலின் நாம் நமது இச்சைகளைக் கட்டுக்குள் கொணருதல் மிகவும் அவசியம். குடி, சூது, விபசாரம் முதலியவைகளுக்கு நாம் இரையாகிவிட்டால் முழுதும் வலியிழந்தவர்களாகிவிடுவோம். விஷய சுகங்களுக்கு அடிமையாகாமல் தன்னுடைய சரீரம், மனம், புத்தி, ஆத்மா ஆகிய எல்லாவற்றையும் தீமை அணுகாவண்ணம் அரண்செய்து காத்து எவன் பரிசுத்தனாய் விளங்குகிறானோ அவனே வெளி உலக காரியங்களிலும் கீர்த்தி பெற்று விளங்குவான். அவனே இவ்வுலகில் நற்

கள் தாங்கள் செய்யும் ஒவ்வொரு பேரத்திலும் 'நாம் பிறரை வஞ்சிக்கிறோமா அல்லது வஞ்சிக்கப் படுகிறோமா?'' என்று எண்ணிப் பார்க்கவேண்டும். வக்கீல்களும், வைத்தியர்களும் தங்களுடைய வருமானத்தைப் பார்க்கிலும் கட்சிக்காரன் அல்லது நோயாளியின் நன்மையையே பெரிதாகக் கருதவேண்டும். தாயானவள் குழந்தையை வளர்க்குங்கால் தன்னுடைய பொய்யன்பு காரணமாகக் குழந்தை கெட்டுப் போகாவண்ணம் பயந்து நடக்கவேண்டும். கூலி வேலை செய்யும் ஏழைத் தொழிலாளியும் தன்னுடைய வேலையைச் சரிவரச் செய்தல்வேண்டும். நீதி தர்மத்தைக் கைவிட்டுத் தங்கள் மனம்போனபடி நடக்கும் செல்வன், வியாபாரி, வைத்தியன், வக்கீல் இவர்களைவிட சன்மார்க்கத்தில் உறுதிகொண்டு தன் கடமையைச் சரிவரச் செய்யும் ஏழைத்தொழிலாளியே மிகவும் மேலானவன், இத்தொழிலாளியே உண்மைக் கல்விமானுமாவன். முதலில் கூறிய வியாபாரி, வைத்தியன், வக்கீல் முதலிய சுயநல மனிதர்கள் அதிக புத்திமான்களாயும் பணக்காரர்களாயு மிருப்பினும், அவர்கள் மேற்படி தொழிலாளியை விடக் கல்வியில் தாழ்ந்தவர்களே. ஒவ்வொரு மனிதனும், அவன் எந் நிலையிலுள்ளவனாயினும் சரி, சன்மார்க்க விதிகளை உணர்ந்து அனுசரிக்கக்கூடும் என்பதை நாம் அறிதல் வேண்டும். ஒரு மனிதனுடைய உயர்வு தாழ்வு அவனுடைய பதவியையும் அதிகாரத்தையும் பொறுத்த தன்று; அவனுடைய ஒழுக்கத்தையே முற்றும் பொறுத்தது— ஆனால் அவ்வொழுக்கத்தை அவன் வெளிப்படையாகச் செய்யும் காரியங்களிலிருந்து அறியமுடியாது. அவனுடைய அந்தரங்க நோக்கங்களைக் கொண்டே அதை அறிய இயலும். பிச்சைக்காரனைக் கண்டால் பார்க்கவும் அருவருத்து அவனைத் தூர விரட்டிவிடும் பொருட்டு ஒருவன் அவனுக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறான். மற்றொருவன் அவ்வேழையினிடம் உண்மையான இரக்கங்கொண்டு மிகுந்த அன்புடனே அவனுக்கு நாலணா கொடுக்கிறான்.

இவ்விருவ்ர், நாலணு கொடுத்தவனே உத்தம சன்மார்க்க புருஷன் என்பதிலும், மற்றவன் பாவி என்பதிலும் சந்தேகமில்லை.

இதுகாறும் கூறிவந்த விஷயங்களின் சாராம்சத்தை எடுத்துக் காட்டிவிட்டு இதை முடிப்பேன். எவன் தன்ன ளவில் தூய்மையுடையவனோ, எவன் யாரிடமும் துவேஷ மில்லாதவனோ, எவன் பிறரைத் தன் சுயநலத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்வதில்லையோ, எவன் மனத்தின் கண் மாசற்றவனுய் சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து நடக்கிறனோ அவனே தர்மாத்மா; ✓அவனே உண்மைச் செல்வனுமாவான் இத்தகைய மனிதர்களாலேயே மக்கட் குலத்துக்கு உண்மைத்தொண்டு செய்யமுடியும். தானே குற்றமுள்ளவனு யிருப்பவன் பிறருடைய குற்றத்தை எப்படிப்போக்குவான்? சன்மார்க்கத்தைத் தான் கடைப் பிடியாத ஒருவன் மற்றவர்களுக்கு அதை எப்படி போதிக்க இயலும்? தானே நீரில் மூழ்கிக்கொண்டிருப்பவன் மற்றவர் களின் உயிரைக் காப்பாற்ற முடியுமா? சன்மார்க்கி உலகத் துக்கு எவ்வாறு தொண்டு செய்வதென்று கேட்பதேயில்லை; அவனுக்கு அவ்வழி தானே எதிர்ப்பட்டு விடுகிறது. மக்க ளின் சுகதுக்கங்களுக்கு ஆதாரமானவை ஆரோக்கியம், கீர்த்தி, பணம் முதலியவை அல்ல, நல்லொழுக்கமே உண்மையில் நல்லின்பந்தருவது. இதை உணர்ந்து நாமும் நமது சிநேகிதர்களும் சன்மார்க்கத்திலிருந்து சற்றும் விலகாமலிருக்க அருள்புரியும்படி இறைவனைப் பிரார்த்திப் போம்!

அன்பு வாழ்க! தர்மம் வாழ்க! சத்தியம் வாழ்க!